# தெரிந்தவர்கள்

காலையில்தான் வந்திருந்தான். ஸ்டேஷனை விட்டு வெளியே வரும்போது குளிர் அதிகமாக இருந்தது காலையில். இந்தக் குளிர்க் காற்று கூட இங்கே அதன் இயல்பில் இருப்பதாகப் பட்டது. அவன் இருந்த இடத்தில் கடுங்குளிர், கடுமையான வெப்பம்.

பெட்டியை இழுத்தபடியே நடந்து வந்தான். வெளியே ரிக்ஷாக் காரர்களைக் காணோம். காலி ரிக்ஷாக்கள், படுதாக்கள் இறக்கி விட்டபடி நின்றிருந்தன. ஏதோ ஒன்றில் மட்டும் சுருண்டு மடங்கிய கால் வெளியே தெரிந்தது. எதிர் டீக்கடையில் அப்போதுதான் பாட்டு போட்டுக்கொண்டிருந்தார்கள். அந்தக் கடைக்காரனை இங்கு இருந்தபோதே தெரியும். அருகில் போனதும் அடையாளம் கண்டுகொண்டான்.

''வாங்கண்ணே... இப்பத்தான் வர்றீங்களா?''

தலையாட்டினான்.

''ரெண்டு மூணு வருசமிருக்குமா... வந்து... வேலை எங்க, அரேபியாலதானே?''

''அங்கதான்'' என்றான்.

டீ வந்ததும் குடித்தான். அவ்வளவு சூடாக இல்லை. டீக்கடைப் பந்தலுக்குக் கீழே ஒடுங்கியிருந்த ரிக்ஷாக்காரனைப் பார்த்தான். முகம் தெரியாமல் துண்டால் முக்காடு போட்டு கட்டிக்கொண்டு பீடி பிடித்துக்கொண்டிருந்தான். கூப்பிட்டவுடனே எழுந்து வந்தான்.

தெருவில் அப்போதுதான் இயக்கம் ஆரம்பமாகியிருந்தது. கோலம் போடும் பெண்களின் குனிந்த உடலும், கைகளும்

பரபரப்பாக. சிலர் அதே நிலையில் தலையை உயர்த்திப் பார்த்தார்கள். தூக்கம் கலையாத முகங்கள். தெரு அப்படியே இருந்தது.

அவன் வீட்டு முன்பு போனபோது அப்போதுதான் கோலம் போட்டுவிட்டு அவள் போயிருப்பது தெரிந்தது. சின்னக் கோலம். வாசல்படியில் காலடித் தடங்கள் ஈரமண்ணோடு. கதவைத் தட்டும்போது ரிக்ஷாக்காரன் திரும்பிப் போய்க் கொண்டிருந்தான்.

கதவைத் திறந்த அவள் சந்தோஷத்தில் சிரித்தாள்.

''வாங்க... பெட்டிய குடுங்க.''

எல்லோரும் எழுந்துகொண்டார்கள். பேச்சரவம் எங்கும் பரவியது. அப்பா அவன் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டார். குழந்தைகள் வீடெங்கும் கரைச்சலோடு ஓடின. அம்மாவைக் காணோம். பெரியக்கா வீட்டுக்குப் போயிருக்கக் கூடும். அவளும் இதே ஊரில் வேறு தெருவில் இருந்தாள். அவன் தங்கைகள் உறக்கம் போகாத முகத்தோடு சிரித்தார்கள்.

அவனுக்கு அசதியாக வந்தது. குழந்தைகள் பெட்டியைத் திறக்க முயற்சி செய்துகொண்டிருந்தன. யாரோ அதட்டினார்கள். அவன் உள் ரூமில் போய் கைலியை மாற்றிக்கொண்டு படுக்கையைப் போட்டான். அவள் உள்ளே வந்து சொன்னாள்:

''சாப்பிட்டு தூங்கலாம்ல...''

''இல்ல... அசதியா இருக்கு. தூங்கறேன்.''

அவள் போகும்போது கணுக்கால் சதை தெரிந்தது. அவனுக்குத் தூக்கம் வந்தது.

பெரிய பெரிய சப்தங்களும் சிரிப்புமாகக் கேட்டது. பலகார வாடையடித்தது. அவன் அறையில் யாரோ எட்டிப் பார்த்துப் போனார்கள். வெயில் ஜன்னல் வழியாகத் தலைப் பக்கம் வரை வந்திருந்தது. எழுந்துகொண்டான். படுக்கையைச் சுருட்டிவிட்டு வெளியே வந்தான்.

வெளியே அம்மா, அக்கா, பெரிய மாமா, மாமா, இன்னும் நிறையத் தெரிந்தவர்கள். அவனைப் பார்த்ததும் சிரித்தார்கள்.

அவனும் பதிலுக்குச் சிரித்தான். அவர்களைக் கடந்து பின்கட்டுக்குப் போனான். பின்னால் திறந்த வெளி இருந்தது. துவைப்பதற்காகப் பெரிய கல் திண்டு இருந்தது. புதுசாகச் சில செடிகள்.

திண்டில் உட்கார்ந்தபடியே பல் தேய்த்தான். அக்கா பின்வாசல் படியில் நிற்பது தெரிந்தது. அவள் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுக் கிட்டத்தில் வந்தாள்.

''என்னடா இப்படியாயிட்டே. ஆளே கருத்துப் போயி... சாப்பிடுறயா இல்லையா?''

''சாப்பிடாம என்ன செய்றேன். நம்ம சாப்பாடு கிடைக்காதுல்ல.''

''மாமா கூட ரொம்பவும் கேட்டாரு. காலைல யாரோ தேடி வந்துட்டாங்க. சாயங்காலம் வருவாரு இங்க. சுமதிக்கு காது குத்து நடத்தறப்ப உனக்கு லெட்டர் போட்டேன் வரச் சொல்லி. பதிலே இல்லை.''

''லீவு கிடைக்கலை.''

''பாத்தியா அதுகளை, காலைலேயே வந்திருச்சுக.''

அவன் திரும்பிப் பார்க்கும்போது ஜன்னலில் யாரோ பார்ப்பது தெரிந்தது. அக்கா உள்ளே போகும்போது சொன்னாள்:

''நாளைக்கி வீட்டுக்கு வா... நெறையா பேச வேண்டியது இருக்கு.''

அவன் உள்ளே திரும்பி வந்து பேசிக்கொண்டிருந்தான். பெட்டியைத் திறந்து சாமான்களை எடுத்து ஒவ்வொருவருக்கும் கொடுத்தான். சாப்பிட அடுப்படிக்குப் போகும்போது அவளிடம் கேட்டான்:

''எப்படியிருக்கே?''

''எனக்கென்ன, நீங்கதான் இப்படியிருக்கீங்க. உங்க அக்கா ஏதோ பேசிக்கிட்டிருந்த மாதிரி தெரிஞ்சது.''

''வீட்டுக்குக் கூப்பிட்டா.''

''நேத்து வரைக்கும் இந்தப் பக்கமே வர மாட்டாங்க... உங்க அம்மா கூட இப்ப அங்கதான்..''

''கதிர் வந்தானா...?''

''யாரு, உங்க பிரெண்டா... நாலு மாசமாச்சு... எட்டிப் பாக்கல. ஏன் ஏதும் அனுப்பிச்சீங்களா..?''

''இல்லை.''

அவன் யோசித்தபடியே சாப்பிட்டான்.

''ஆறு மாசத்துக்கு முன்னே நீங்க அனுப்பினதா ஆறாயிரம் கொடுத்தாரு. பிறகு ஆளே பாக்க முடியலே.''

அவன் சாப்பாட்டில் இருந்து எழுந்துகொண்டான். கதிருக்கு அனுப்பிய பத்தாயிரம் என்னவாயிற்று? ஒருவேளை அவனே வைத்துக்கொண்டானோ? அப்படியெல்லாம் இருக்காது என்ற நினைப்பே வந்தது. அவன் போனதில் இருந்து பல தடவை ரூபாய் அனுப்பியிருக்கிறான். கதிர் அப்படிச் செய்தது கிடையாது. கதிரைப் பார்க்க வேண்டும் என்ற தோணியது.

கதிர் வீடு சர்ச்சுக்குப் பின்புறத்தில் உள்ள தெருவில் இருந்தது. வீடு சின்னதாக இருந்தாலும் மாடி உண்டு. மாடியில் நீண்ட அறையிருந்தது. அவன் அரேபியா போவதற்கு முன்பெல்லாம் அங்கேதான் கிடப்பான். கதிரும் இன்னும் நண்பர்களும் மாடியில் சீட்டு விளையாடுவார்கள். அரட்டையடிப்பார்கள். அந்த வீட்டில் சர்வ சுதந்தரமிருந்தது எல்லோருக்கும்.

அவன் போனபோது உள்ளே கதிரின் குரல் கேட்கவில்லை. எங்காவது வெளியில் போயிருப்பானோ? வெயிலாக இருப்ப தால் வீட்டில்தான் இருக்க வேண்டும். கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே போனான். அடுப்படி வாசலில் உட்கார்ந்து கதிரின் அம்மா ஏதோ செய்துகொண்டிருந்தாள். ஹாலில் பூக்களைக் கொட்டிக் கட்டிக்கொண்டிருந்தாள் கதிரின் தங்கை.

அவனைப் பார்த்ததும் எழுந்துகொண்டாள்.

''வாங்கண்ணே... எப்ப வந்தீங்க... எங்களையெல்லாம் நெனைப்பிருக்கா..?''

அவளே உள்ளே குரல் கொடுத்தாள்.

''அம்மா, மணியண்ணே வந்திருக்காங்க.''

அம்மா சிரித்தபடியே வெளியே வந்தார்கள். விசாரித்தார்கள். கதிர் மேலேதான் இருப்பான் என நினைத்துக் குரல் கொடுத்தான். பதில் இல்லை. அவனே மேலே ஏறிப் போனான். கதிர் தூங்கிக் கொண்டிருந்தான். ஆள் படுத்துப்போனது போலப் பட்டது. கிட்டத்தில் போய் எழுப்பினான்.

கதிர் விழித்தான்.

''லே... எப்ப வந்தே... ஆச்சரியமா இருக்கு... நிஜம்தானா இது. கையக் கொடு.''

கையைப் பிடித்து எழுந்தான். கதிர் குரல், பேச்சு அப்படியே இருந்தது. எழுந்து நின்று சோம்பல் முறித்தான். பின்பு மணியின் தோள் மீது கையைப் போட்டுக்கொண்டான்.

''எப்படியிருக்கே? எப்ப வந்தே?''

''காலைலதான்.''

''கீழே அம்மாவ பாத்தயா. அவதான் கேட்டுக்கிட்டு இருந்தா. பெரிய தங்கச்சிக்குக் கல்யாணமாயிருச்சு. இப்பதான் ஒரு மாசம் இருக்கும். இன்னைக்கு வருவா... அவ கல்யாணத்தன்னைக்கு வரைக்கும் கேட்டுக்கிட்டே இருந்தா. அவளே லெட்டர் போட்டாளே கெடைச்சதா?''

நிஜமா தெரியவில்லை. அவனுக்கு அப்படிக் கடிதம் வர வில்லை. பேசாமலிருந்தான். கதிர் கீழே இறங்கி வந்து அம்மாவிடம் சொன்னான்:

'சமையல் நடக்கா. இரு. மீன் வாங்கிட்டு வாறேன். சாப்பாட்டை ஒரு கை பாத்துருவோம்.''

அவன் சைக்கிளில் வெளியே கிளம்பிப் போனான். மணியோடு கதிரின் அம்மா பேசிக்கொண்டிருந்தாள். மணி, மல்லிகாவை விசாரித்தான். சாப்பாடு முடிந்த பின்பும் கதிர் உள்ளே ஓடியாடிய படியே இருந்தான். அவனுக்குள் ஏதோ அதிகமாக வேலை செய்தது போல இருந்தது.

சாயங்காலம் அவன் கிளம்பும்போது கதிர் சொன்னான்:

''வீட்ல இரு. மல்லிகா வந்தா வரணும்பா. அழைச்சிட்டு வாறேன்.''

அவன் வீட்டுக்குப் போகும்போது இருட்டியிருந்தது. அம்மா ஒரு பக்கமாக உட்கார்ந்திருந்தாள். அம்மாவின் கிட்டத்தில் போய் உட்கார்ந்துகொண்டான்.

''இப்ப எதுக்கு அவ கூடப் போயி இருக்கே. இங்க என்ன சொல்றாங்க'' என்றான்.

''ஒருத்தர் பேசுற மாதிரி எதுக்கு இருக்கணும் அதான்'' என்றாள். அவனுக்கும் எதுவும் புரியவில்லை. அம்மா அழுதாள் திடீரென. அவன் அவளையே பார்த்துக்கொண்டிருந்தான். அவள் எழுந்து உள்ளே போனாள். அவனும் எழுந்துகொண்டான். உள்ளே சமையல் வேலை நடப்பது தெரிந்தது. உள்ளே போய்க் கேட்டான்:

''அக்காவ எங்கே...?''

''என்னமோ கோவமாம். போயிட்டாங்க''

''என்னவாம்?''

''யாருக்குத் தெரியும். அவளுக்கும் கோவம் போலும்'' அம்மா ராத்திரி அக்கா வீட்டுக்குக் கிளம்பும்போது உள்ளே கூப்பிட்டு நானூறு ரூபாய் கொடுத்தான். வாங்கிக்கொண்டாள்.

மறுநாள் காலையிலேயே கதிர், மல்லிகாவை அழைத்துக் கொண்டு வந்தான். வீட்டில் அவன் பேச்சு சப்தம் தனியாகக் கேட்டது.

''என்ன ஆளே பாக்க முடியல. அவுங்க வந்தாதான் வரணுமா?''

''கல்யாண வேலையா அலைஞ்சதுல நேரமில்ல. இனிமே இங்க தான். என்ன சாப்பாடு?''

மல்லிகா அவனைத் தேடி அறைக்கே வந்தாள். அவன் எழுந்து உட்கார்ந்துகொண்டான்.

''வாம்மா...'' என்றான்.

''எப்பிடிண்ணே இருக்கீங்க'' என்றாள்.

''அதான் இருக்கேன்ல...''

''ஏன், கல்யாணத்துக்கு வரலே... கண்டிப்பா அவுங்களையும் கூட்டிக்கிட்டு நீங்க வீட்டுக்கு வரணும்...''

பெட்டியில் இருந்து சில செண்ட் பாட்டில்கள், பவுடர், துணியெல்லாம் கொடுத்தான். அவள் வாங்கிக்கொண்டாள். கதிர் தானாகப் பெட்டியைத் திறந்து பார்த்தான். கொஞ்சம் செண்ட் போட்டுக்கொண்டான். உள்ளே கிடந்த சாக்லெட்டைத் தின்றான்.

பிறகு கேட்கலாம் எனத் தோணியது மணிக்கு. சாயங்காலமாக இருவரும் கிளம்பி வெளியே வந்தார்கள். செம்பகவல்லியம்மன் மேட்டுக்கு வந்து உட்கார்ந்துகொண்டார்கள். கதிர் எதையோ பேசிக்கொண்டிருந்தான். பேச்சின் நடுவில் மணி கேட்டான்:

''நான் அனுப்பின ரூவா என்னாச்சு?''

பதில் சொல்லவில்லை.

''வரலையா?''

''வந்துச்சு.''

''என்ன செஞ்சே?''

''திடீர்னு கல்யாணம் பண்ண வேண்டியிருந்ததால செலவு ஆகிப்போச்சு. அப்பாவுக்கு வர வேண்டிய இடத்தில பணம் வரலே...''

''அதை எனக்கு எழுதியிருக்கலாம்ல. இல்ல வீட்ல பணத்தைக் கொடுத்திட்டு கேட்டு வாங்கி இருக்கலாம்ல...''

அவன் ரோட்டைப் பார்த்தபடியே இருந்தான்.

''அதுகூட இருந்த லெட்டரை என்ன செஞ்சே?''

''இருக்கு...''

மணிக்குக் கோபம் வந்தது.

''கேட்டா பதில் சொல்ல முடியலையா?'' என்றான்.

கதிர், மணி முகத்தைப் பார்க்காமலே சொன்னான்.

''என்ன, தூக்கிட்டா ஓடிட்டாங்க? ரூபா வந்ததும் தந்திரலாம்னு நெனைச்சேன்.''

''நான் அப்பிடி சொன்னனா... நீ ஓடிட்டேன்னு.''

''பிறகு எப்படி சொன்னே. இவ்வளவு காலமா இருந்ததுக்கு நீ என்ன பேசினாலும் கேட்டுக்கிட வேண்டியதுதான்.''

மணிக்குக் கோபம் அதிகமானது.

''நான் என்னடா சொன்னேன். பணத்தை எடுத்துச் செல வழிச்சுட்டு சொல்லாமலும் இருந்தா கேக்க மாட்டாங்களா...''

கதிர் ஏதோ வைதான்.

''உன் ரூவாதான, வரும்... பொல்லாத ரூவா. துட்டு சேத்த வுடனே இப்படியெல்லாம் வந்துரும்டா. நான் மடையன். உன் ரூவாயச் செலவழிச்சேன் பாரு...'' இன்னும் ஏதோ வைதான்.

மணிக்குக் கோபம் வந்தது.

''நீ திருப்பியே தர வேண்டாம். வச்சிட்டுப் போ...''

''உன் பிச்சைக்காசு ஒண்ணும் வேணா. நான் வரேன்'' அவன் இறங்கிக் கீழே போனான். புழுதி கலைந்து பறந்தது. மணி எழுந்து நின்று பார்த்தான். கதிர் வேகமாகப் போய்க் கொண்டிருந்தான்.